தது. மஹாபலனும் பராக்ரமத்தினால் தேவேந்த்ரனைப் போன்றவனுமாகிய அவ்வானரோத்தமன் ஹனுமான் அந்த மஹாபர்வதத்தின்மேல் விளையாடினன். அங்ஙனம் விளையாடிக்கொண்டிருக்கும் பொழுது அம்மஹாபர்வதம் மஹானுபாவனாகிய ஹனுமானது பாதங்களின் அபிகாதத்தினால் நெருக்குண்டு, ஸிம்ஹத்தினால் அடிக்கப்பட்ட பெரிய மத்தகஜம்போல் ப்ரகாசித்தது. அப்பர்வதம் அந்தக் கபீந்த்ரனுடைய அடிவைப்புகளால் தன் சிகரங்கள் சிதறப்பெற்று ஜலப்ரவாஹங்களைப் பெருக்கியது. ஹனுமானது பாதங்களின் உறைத்தல்களால் அம்மஹா பர்வதத்தில் அப்பொழுது ம்ருகங்களும் யானைகளும் பயந்தோடிப்போயின. பருப்பருத்த வ்ருக்ஷங்களும் நடுக்கமுற்றன. மத்யபானஞ் செய்வதில் மிக்க அபிநிவேசமுடைய (மனவிருப்பமுடைய) நாகதம்பதிகளும் கந்தர்வமிதுனங்களும் வித்யாதரக்கூட்டங்களும் அந்தப் பர்வதத்தின் பெருப்பெரிய தாழ்வரைகளைவிட்டுப் பயந்தோடிப்போய்க் கொண்டிருந்தன. பக்ஷிகள் மேல் கிளம்பிப்போயின. பெரிய ஸர்ப்பங்கள் பாழிகளில் மறைந்தன. சிகரங்களிலுள்ள பெருங்கற்கள் இப்படியும் அப்படியும் அசைந்தன. அப்பொழுது ஸர்ப்பங்கள் பாழிகளினின்று பாதி வெளிவந்து படங்களை விரித்துப் பெருமூச் செறிந்துகொண்டிருக்கையில், அந்தப் பர்வதம் பல பதாகைகள் கட்டப்பெற்றதுபோல் ப்ரகாசித்தது. அந்தப் பர்வதத்திலுள்ள மஹர்ஷிகள் பயந்து ஓடிப்போகையில், அவர்களைப்பிரிந்த அப்பர்வதம் மஹாரண்யத்தில் ஸஹாயமாயிருப்பவர் கைவிட்டுப்போகையில் ஒண்டியாகிப் பயந்து வருந்துகின்ற வழிப்போக்கன்போலிருந்தது. வேகமுடையவனும் சத்ருவீரர்களை முடிக்குந் திறமையுடையவனும் கம்பீரமுடையவனும் மிகவும் புகழ்பெற்ற மஹானுபாவனும் வான

ரர்களில் சிறந்த வீரனுமாகிய அந்த ஹநுமான் வேகத்தைக்காட்ட முயன்று மனத்தில் ஸமுத்ரத்தைத்தாண்ட நிச்சயித்து அப்பொழுதே மனத்தினால் இலங்காபுரியைச் சேர்ந்தவனாயினன். அறுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

கிஷ்கிந்தாகாண்டமும் முற்றுப்பெற்றது.

ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணேநம:.

---